10th August 1960]

டிவிஷனல் ஆபீசரோ கொடுக்க மறுக்கிறார்கள். விசேஷ காலங்களில் சர்க்கரை கிடைக்க அரசாங்கம் வகை செய்வார் களா?

THE HON. SRI M. A. MANICKAVELU: அதைச் செய்து கொண்டுதான் வருகிறார்கள். தீபாவளி, பொங்கல் காலத்தில் அதிகமாக சர்க்கரை கொடுக்க ஏற்பாடு செய்கிறார்கள்.

SRIMATHI P. K. R. LAKSHMIKANTHAM: கல்யாண சமயங் களிலே . . .

THE HON. SRI M. A. MANICKAVELU: கல்யாணங்கள் ஒரு வருஷத்திலே ஜாஸ்தி நடக்கலாம், ஒரு வருஷத்திலே குறைவாக நடக்கலாம். அதைப்பற்றி திட்டவட்டமாகச் சொல்ல முடியாது. பண்டிகை என்றால், அந்தந்தக் காலத்தில் தாராள மாக அதிகமாகக் கொடுக்கிறோம்.

SRI K. SATTANATHA KARAYALAR: சர்க்கரை விநி யோகிப்பதற்கு எந்த விதமான நடவடிக்கை எடுக்கப் பட்டுள்ளது? கூட்டுறவு இயக்கத்தின் மூலமாக பெரும் பகுதி கொடுக்கப்படாமல் மிகக் குறைந்த அளவு தானே கூட்டுறவு இயக்கத்தின் மூலமாகக் கொடுக்கப்படுகிறது. பத்து சதமானத் திற்கும் குறைவாகத்தான் கூட்டுறவு இயக்கத்தின் மூலமாகக் கொடுக்கப்படுகிறது. சர்க்கரை விநியோகத்தில் நமக்குப் பரிபூரணமான கட்டுப்பாடு கிடையாதா? கூட்டுறவு இயக்கத் திற்கு முதல் இடம் கொடுக்காமல் பரம்பரை வியாபாரிகள் மூலமாகவே கொடுக்கப்படுவது ஏன்?

MR. SPEAKER: மூலக் கேள்வி, "மதுரை ஜில்லாவிற்கு ஒதுக்கப்பட்ட சீனி மூட்டைகள் எத்தனை" என்பது பற்றியது, "பாலிஸி மாட்டர்" கேட்கப்படவில்லை. மந்திரி அவர்கள் சுருக்கமாகப் பதில் கொடுப்பதாக இருந்தால் எனக்கு ஆட்சேபணை இல்லை. I should have even disallowed the question of the hon. Member Srimathi Lakshmikantham and there is no justification for the hon. Member to put a similar question.

(பதில் இல்லை)

* 72 *Q.*—SRI A. A. RASHEED: Will the Hon. the Minister for Revenue be pleased to state the steps taken to bring down the price of sugar in the Madras City?

THE HON. SRI M. A. MANICKAVELU: Sugar is being sold in Madras City at present at Rs. 118 to 121·44 per bag and Rs. 1·66 to 1·71 per viss, which is the controlled price.

[10th August 1960

SRI A. A. RASHEED : Is the Hon. Minister aware that sugar is not available at the controlled rate in the Madras City and it is sold in fact at Rs. 2–50 in blackmarket and if so, what steps the Government have taken to put down blackmarketing and sell sugar at the control price?

THE HON. SRI M. A. MANICKAVELU : Government have fixed control price but the prices vary in the blackmarket. Blackmarket is a very elusive sort of market. If more sugar is put on the market, blackmarket will have no busy time. The only remedy is for more sugar to be made available and also for the public to boycott the blackmarket.

MR. SPEAKER : Now the hon. Member, Sri Sattanatha Karayalar, can put his supplementary question in a modified form under this main question.

SRI K. SATTANATHA KARAYALAR : கூட்டுறவு சங்கங்களின் மூலமாக சர்க்கரையை விநியோகித்தால் அதன் விலை குறையும் என்று சர்க்கார் கருதவில்லையா? சர்க்கரையை முழுவதும் கூட்டுறவு மார்கெட் மூலமே விநியோகிப்பதற்கு வேண்டிய நடவடிக்கை எடுக்கப்படுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU : அதற்குப் போதுமான கூட்டுறவு சங்கங்கள் இருக்கவேண்டும். இம்மாதிரி சர்க்கரை விற்கிறவர்கள் நிறைய இருக்கிறார்கள். மதுரை தாலுகாவில் மாத்திரம் 800 சில்லரை வியாபாரிகள் இருக்கிறார்கள். எல்லா தாலூக்காக்களிலும், பிர்க்காக்களிலும் கூட்டுறவு சங்கங்கள் கிடைப்பது கஷ்டம். ஆகையினால் சாத்தியமான இடங்களில் கூட்டுறவு சங்கங்கள் மூலம் விநியோகிக்கிறோம். மற்ற இடங்களில் " ரீடைலர்ஸுக்கு " கொடுக்கிறோம்.

SRI R. KRISHNASAMI NAIDU : சர்பத் அல்லது மற்ற இனிப்பு பண்டங்கள் தயாரிப்பதற்காக பெர்மிட் வாங்கிக் கொள்ளுபவர்கள், சர்க்கரை மூட்டைகளைக் குறைந்த அளவுக்கு உபயோகப்படுத்திக்கொண்டு, பாக்கியை பிளாக்மார்கெட்டில் விற்பதாக பரவலாக புகார்கள் இருக்கின்றன. கொடுக்கப்படும் பெர்மிட்டுகளின் பேரில் வாங்கப்படும் சர்க்கரை சரிவர உபயோகப்படுத்தப்படுகிறதா என்பதைப் பரிசீலனை செய்து, இம்மாதிரி பாக்கி சர்க்கரை பிளாக்மார்கெட்டில் விற்கப்படுவதைத் தடுக்க சர்க்கார் வேண்டிய நடவடிக்கைகள் எடுப்பார்களா?

THE HON. SRI M. A. MANICKAVELU : இம்மாதிரி சர்க்கரை பிளாக்மார்கெட்டில் விற்கப்படுவதற்கு உபயோகிக்கப்படுகிறது என்று புகார்கள் வரும் சமயத்தில், அவைகளை விசாரித்து தகுந்த நடவடிக்கை எடுக்கப்படும். புகார் வந்தால்தான் தெரியும்.

SRI A. A. RASHEED : In order to reduce the price of sugar, have the Government of Madras asked the Government of India for increased allotment of sugar for our State and if so, what is the reply received from them?

10th August 1960]

THE HON. SRI M. A. MANICKAVELU : We have not only asked for increased supply but have also asked them to send the consignment a little in advance so that it may come here in time. As I said earlier, it takes $1\frac{1}{2}$ to 2 months for sugar to reach Madras after it is loaded in Uttar Pradesh and other States.

SRI P. M. MUNUSAMI GOUNDER: சர்க்கரை விநியோகம் செய்வதில் மற்ற சாமான்கள் வாங்கினல் தான் சர்க்கரை கொடுக்கப்படும் என்ற முறையில் நடந்துகொண்டிருக்கிறது. ஆகையால் புதியவர்கள் போகும்பொழுது சர்க்கரை கொடுக்க மறுக்கிறார்கள். யார் சென்றாலும் கொடுக்கலாம் என்ற முறையை சர்க்கார் ஏற்படுத்தவேண்டும். அதே மாதிரி சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்குக் கூட தனிப்பட்ட முறையில் சர்க்கரை விநியோகம் செய்யப்படுவதாகத் தெரிகிறது. அந்தச் சலுகை எல்லோருக்கும் கிடைக்கச் செய்ய சர்க்கார் ஆலோசிக்குமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: அதிலே என்ன கஷ்டம் என்றால், சர்க்கரையை கண்டிரோல் விலைக்கு வாங்கி பிளாக்மார்கெட்டில் விற்பதற்கென்றே ஆள்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கு நாள் ஒன்றுக்கு 8 அணா 12 அணா கூலி கொடுக்கப் படுகிறது, கியூவில் நின்று வாங்குவதற்காக. இன்னும் ஏதாவது சாமான் வாங்கவேண்டுமென்று வற்புறுத்துவது, இதை ஓரளவுக்குத் தடை செய்வதுமாதிரி இருக்கிறது.

*Madras-Chingleput District Retail Dealers' Association*

* 73 *Q*.—SRI V. K. KOTHANDARAMAN : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the Government have received a memorandum, dated 3rd March 1960, from the Madras-Chingleput District Retail Dealers' Association, Madras, regarding the difficulties in respect of procurement and distribution of wheat, sugar skimmed milk powder, rice and camphor; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes.

(*b*) Under the direction of the Government, the Commissioner of Civil Supplies had looked into the matter and had also given a reply on the 12th April 1960 to the Retali Dealers' Association.

*Five-faced Lingam*

* 74 *Q*.—SRI A. VEDARATHNAM: கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) திருச்சி ஜில்லா திருவானைக்காவலில் வடக்குத் தெருவிலுள்ள ஒரு பழைய கோவிலில் சமீபத்தில் பஞ்சமுக லிங்கம் அகப்பட்டதா?